


## உள்ளே செல்லும் முன் ஒரு சில வார்த்தைகள் ...

ஒரு சிறு நெருப்புக்கங்கு உங்களின் முன் கிடக்கிறது. ஓர் அப்பாவிக் குழந்தை வெறும் கால்களுடன் அதை நோக்கி நடந்து வருகிறது. இன்னும் சற்றுநேரத்தில் அதன் பிஞ்சுக்கால்கள் அத்தீக்கங்கை மிதிக்கப்போகின்றன எனில் நீங்கள் என்ன செய்வீர்கள் ...?

நீங்கள் உடனே அக்குழந்தையை வாரியெடுத்துக் கொள்வீர்கள். நெருப்பிலிருந்து தூரமாக நிறுத்தியப்பின் உங்களுக்கு எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்படும் அல்லவா...?

இவ்வாறே ஒரு மனிதன் நெருப்பில் எரிந்து விட்டான் அல்லது கரிந்து விட்டான் எனில் வேதனையில் நீங்கள் துடித்துப்போய் விடுகிறீர்கள்...! இது ஏன்? என்று நீங்கள் எப்போதாவது சிந்தித்ததுண்டா...? இது ஏனெனில், படைப்புகள் அனைவரும் ஒரே தாய் தந்தையின் மக்கள். ஒவ்வொருவரின் நெஞ்சிலும் ஒரு துடிக்கும் இதயம் உண்டு. அதில் அன்பு உண்டு, அக்கறையுண்டு, துன்பத்தில் பங்கு பெறும் துடிப்புண்டு. ஒருவர் மற்றவரின் இன்ப, துன்பங்களில் பங்கு பெறத்துடிக்கிறார்.

ஒருவருக்கொருவர் உதவி செய்துவிட்டு மகிழ்கிறார். யாரின் இதயத்தில், முழு மனித குலத்திற்காக அன்புணர்ச்சி பிறக்குமோ, யாருடைய ஒவ்வொரு பணியும் மனித சேவைக்காகவே இருக்குமோ, யார் யாரையும் வேதனை, துன்பத்தில் விழுவதைக் கண்டு மனம் துடிக்கிறாரோ மேலும் அவருக்கு உதவுவதை தனது வாழ்வின் கட்டாய அம்சமாக ஆக்கிக் கொண்டாரோ, அவர் தான் உண்மையில் மனிதன்.

இந்த உலகில் மனிதனின் இந்த வாழ்வு தற்காலிகமானது. மரணத்திற்குப்பின் அவனுக்கு இன்னொரு வாழ்வு உண்டு. அது நிரந்தரமானது. தனது உண்மையான இரட்சகனை வணங்கி வழிப்படாமல் மரணமடைந்துவிட்டால் மரணத்துக்குப்பின் உள்ள வாழ்வில் சுவனம் கிடைக்க முடியாது. நிரந்தரமாக நரகின் எரிகொள்ளியாக நேரிடும்.

இன்று, லட்சோபலட்ச, கோடிக்கணக்கான மனிதர்கள் நரகின் எரிக்கொள்ளிகளாவதற்கு ஓடிக்கொண்டிருக்கிறார்கள். நேராக நரகிற்கு இட்டுச் செல்லும் பாதையில் சென்று கொண்டிருக்கிறார்கள். இச்சூழ்நிலையில் மனித குலத்தின் மீது அன்பு கொண்ட, மனிதாபிமானத்தை நம்புகின்ற அனைவரின் மீதும் கடமையென்னவென்றால், அவர்கள் உடனே எழுந்து வரட்டும். நரகில் விழ இருப்பவர்களைக் காப்பாற்றும் தம் கடமையை நிறைவேற்றட்டும் ...!

மனிதர்களுடன் உண்மையான அக்கறை கொண்ட அவர்களை நரக நெருப்பிலிருந்து காப்பாற்றும் கவலையில் உருகக்கூடிய மௌலானா முஹம்மது கலீம் சித்தீகீ அவர்கள் அன்பு, பாசத்தின் சில பூக்களை இங்கே தூவியுள்ளார்கள். அவற்றில் மனித குலத்தின் மீது கொண்டுள்ள அவரது அன்பு பளிச்சென்று மின்னுகின்றது. அதன் மூலம் ஒரு உண்மை முஸ்லிம் என்ற காரணத்தால், எம் அனைவரின் மீதுள்ள கடமையை அவர்கள் நிறைவேற்றியுள்ளார்கள்.

இந்த சில வார்த்தைகளுடன் ... இதயத்தின் இந்த துணுக்குகளை உங்களின் உடமையை உங்களுக்கு முன் வைக்கிறேன்.



வஸீசுலைமான் நத்வீ
ஆசிரியர் – அர்முஙான் உர்தூ மாத இதழ்
புலத் – முஜஃப்பர் நகர், உ.பி.



## உங்களது உடமை இதோ உங்களுக்கே !

என் பாசமிகு வாசக நேயர்களே !

நான் என் சார்பாகவும், என் முஸ்லிம் சகோதரர்கள் அனைவரின் சார்பாகவும், முதலில் உங்களிடம் மன்னிப்பு வேண்டுகிறேன்.

ஏனெனில் உலகில் சாத்தானின் மிகப்பெரும் சதி வலையில் சிக்கி, உங்களின் மாபெரும் உடமையை இதுவரை உங்களிடம் ஒப்படைக்காமல் இருந்து விட்டோம். பாவத்தின் இடத்தில் பாவிகளின் அவமதிப்பை, எங்கள் மனங்களில் அமர்த்தி சாத்தான் உலகையே போர்க்களமாக்கிவிட்டான் என்று மனம் வருந்துகிறோம்.

இத்தவறின் பிராயச்சித்தமாக, உங்களின் உடமையை உங்களிடம் சேர்ப்பிக்கவும், மேலும் எவ்வித ஆதாய நோக்கின்றி, முழுபாசம், மனிதநேய அடிப்படையில் உங்களின் மனம் தொட்டுப் பேசவும் இதை எழுதுகின்றேன்.

இக்கருத்துக்களை உங்கள் வரை எத்திவைப்பதில் களங்கமற்ற எண்ணத்துடன், உண்மையான அக்கறையின் கடமை நிறைவேற்றத் துடிக்கிறேன் என்பதற்கு, இதய உணர்வுகளை அறியும் சத்திய இறைவனே சாட்சி ...!

இவற்றை இதுவரை தங்களிடம் எத்திவைக்காததன் வேதனையால் எத்தனை இரவுகள் என் தூக்கம் களைந்து போனது என்பதையும் அவனே அறிவான்...!

உங்களிடமும் ஓர் இதயம் உண்டு. அதையும் கேட்டுப்பாருங்கள். அது முற்றிலும் சத்தியமானது...! இது சொல்லிக்காட்டும் விஷயமன்று. எனினும், எனது பாசமிக்க வார்த்தைகளை நீங்கள் மனவிருப்புடன் பார்க்க வேண்டும், படிக்க வேண்டும். அகில உலகம் அனைத்தையும் படைத்து இயக்கி வரும், அந்த இறைவனுக்காக இதைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும் என்பதே என் ஆசை. என் சகோதர, சகோதரிகளின் உடமையை அவர்களிடம் ஒப்படைத்துவிட்டேன். என் மனிதாபிமான கடமையை நிறைவேற்றிவிட்டேன் என்று என் மனமும், ஆன்மாவும் சாந்தியடைய வேண்டும் என்பதே என் இதய ஆசை.

இவ்வுலகில் தோன்றிய பின் மனிதனுக்கு எந்த ஒரு சத்தியத்தை அறிந்து, அதை மனதார ஒப்புக்கொள்வது அவசியமோ, அது தான் அவனது மிகப்பெரிய பொறுப்பும், கடமையும் ஆகிறதோ அந்த பாசமிகு செய்தியையே உங்களுக்குச் சொல்ல விரும்புகிறேன்.

## இயற்கையின் மாபெரும் உண்மை

இப்பிரபஞ்சத்தில் இன்னும் சொல்லப்போனால் இயற்கையின் மாபெரும் உண்மையாதெனில், இந்த உலகம் படைப்பினங்கள் இன்னும் அண்ட சராசரம் அனைத்தையும் படைத்தவன்... இவற்றைச் சீராக நிர்வகித்து வருபவன்... ஏக வல்லவனாகிய இறைவன் ஒருவன் மட்டுமே ! அவன் தன் உள்ளமையிலும் பண்புகளிலும் தனித்தவன்.

அவன் எங்கும் இருக்கும் சக்தி படைத்தவன். எல்லாவற்றையும் பார்க்கிறான், ஏகத்தையும் கேட்கிறான். அகிலமெங்கும் ஓர் இலை கூட அவனது அனுமதியின்றி அசைய முடியாது.



ஒவ்வொரு மனித உயிரும், இதற்கு சாட்சி. அவர் எம்மதத்தை ஏற்றவராயினும் சரி, எந்த சிலையை வணங்குபவராயினும் சரி. அவர் தன் மனசாட்சியால் பரிபாலிக்கும் இரட்சகன், அசல் எசமானன் அவன் ஒருவனே என்று நம்புகிறார். மனித அறிவிலும், முழு பிரபஞ்சத்தின் அதிபதி ஒருவனே என்பதைத் தவிர வேறு எண்ணம் வருவதில்லை.

ஒரு பள்ளிக்கூடத்திற்கு இரண்டு முதல்வர் இருந்தால், அப்பள்ளிக்கூடம் இயங்க முடியாது. ஓர் ஊருக்கு இரண்டு தலைவர்கள் இருந்தால் ஊர் நிர்வாகம் சீர்குலைந்து விடும். ஒரு நாட்டிற்கு இரண்டு அரசர்கள் இருக்க முடியாது எனும் போது, இவ்வளவு பெரிய உலகத்தின் நிர்வாகம் ஒன்றுக்கு மேல் கடவுள்கள் அல்லது எசமானர்கள் மூலம் எப்படி நடக்க முடியும்? மேலும் பிரபஞ்சத்தின் நிர்வாகிகள் பல பேர்கள் எப்படி இருக்க முடியும் ...?

## ஓர் ஆதாரம்

இறைமறை "குர்ஆன்" உலகிற்கு தனது சத்தியத்தை எடுத்துரைப்பதற்கு திருமுறை குர்ஆன் அந்த இறைவனின் சத்திய வேதம் என்பதில் உங்களுக்கு ஐயமிருந்தால் அது போன்ற ஓர் அத்தியாயத்தையேனும் தொகுத்துக் காட்டுங்கள் ...!

"நீங்கள் உண்மையாளர்களானால் இதற்காக இறைவனைத் தவிர அனைத்துலகத்தவர்களையும், உதவிக்காக அழைத்துக் கொள்ளுங்கள் பார்க்கலாம்" (அல்பகரா - 23) என்று சவால் விட்டுள்ளது.

ஆயிரத்து நானூறு ஆண்டுகளாக இன்று வரை உலகிலுள்ள மனிதர்கள், அறிவியல், கணினிகள் வரையிலான ஆய்வுகள் செய்து களைத்து விட்டனர். சோர்ந்து தலை குனிந்து விட்டனரே தவிர, இது இறைவேதமல்ல என்று யாரும் நிரூபிக்க முடியவில்லை. இந்த பரிசுத்த வேதத்தில் அல்லாஹ் நமது அறிவுக்கு அறைகூவல் விடுத்து ஆதாரங்களை வழங்கியுள்ளான்.

## ஓர் உதாரணம்

"அல்லாஹ்வைத் தவிர வானம், பூமியில் அநேக கடவுள்கள் (எசமானர்கள்) இருந்திருந்தால் பெரும் குழப்பங்கள் விளைந்திருக்கும் " (அல் அன்பியா : 22)

உண்மைதான் ஒன்றுக்கு மேல் பல கடவுள்கள் இருந்தால் ஒரு கடவுள் "இப்போது இரவு வரும்" என்று கூற, மற்றொரு கடவுள் "இல்லை பகல் வரட்டும்" என்று கூற சண்டை தான் ஏற்படும். ஒரு கடவுள் ஆறு மாதம் பகல் வேண்டும் என்று கூற அடுத்த கடவுள், "மூன்று மாதம் பகல் இருக்கட்டும்" என்பார். ஒரு கடவுள் "சூரியன் கிழக்கிலிருந்து உதிக்கட்டும்" என்றால், வேறு கடவுள் இல்லை "மேற்கிலிருந்து உதிக்கட்டும்" என்பார்.

தேவர், தேவிகளின் இந்த உரிமை உண்மையானதாக இருந்திருப்பின் அவர்கள் அல்லாஹ்வின் பணிகளில் பங்கு பெறுபவர்களாக இருந்திருப்பின், ஒரு பக்தன் பூஜை, அர்ச்சனைகள் செய்து, மழைத் தேவர்களிடம், தங்களின் கோரிக்கையை ஏற்க வைக்கும் நிலைமை எப்போதாவது நிகழ்ந்திருக்க வேண்டும். பிறகு பெரிய கடவுள் " இப்போது மழை பெய்யாது " என ஆணை பிறப்பிப்பார். உடனே கீழுள்ளவர்கள் போராட்டம் நடத்துவார்கள். பகல் விடியவில்லையே என்று மக்கள் உட்கார்ந்து கொண்டிருப்பார்கள். பிறகுதான் சூரிய தேவர் போராட்டம் அறிவித்துள்ளார் என்பது தெரிய வரும்.

## சத்திய சாட்சி

உண்மை யாதெனில், உலகின் ஒவ்வொரு பொருளும் சாட்சியளித்துக் கொண்டுள்ளன. இந்த சீரான முறையில் இயங்கிக் கொண்டிருக்கும் பிரபஞ்சத்தின் அமைப்பு, இப்பிரபஞ்சத்தின் அதிபதி தனித்தவன் ஒருவனே. அவன் எது வேண்டுமானாலும், எப்போது வேண்டுமானாலும் செய்ய முடிந்தவன்.



அவனை கற்பனைகளில், எண்ணங்களில் கட்டுப்படுத்த முடியாது. அவனுக்கு உருவம், தோற்றம் கற்பிக்க முடியாது என்பதன் சாட்சியம் வகித்துக் கொண்டுள்ளது. அந்த எசமான் அகிலங்கள் அனைத்தையும், மனிதர்களின் சேவைக்காகவே படைத்துள்ளான்.

சூரியன் – மனிதனுக்கு சேவகன். காற்று – மனிதனுக்கு ஊழியன். இந்த பூமியும் மனிதனுக்கு பணி செய்வதற்கே ஆகும். உயிருள்ளவையும், உயிரற்றவையும் எல்லாமே மனித ஊழியத்திற்கு என்றே படைக்கப்பட்டுள்ளன.

மனிதன் இந்த எல்லாவற்றின் தலைவனாக ஆக்கப்பட்டுள்ளான். அல்லாஹ் மனிதனை வெறும் தனது அடிமையாக, தன்னை வணங்கவும், தனக்கு கட்டுப்படவுமே படைத்துள்ளான். நீதி என்னவென்றால், படைத்தவன் – வாழ்வளிப்பவன் – மரணமளிப்பவன் உணவு, நீர் கொடுப்பவன், வாழ்வின் ஒவ்வொரு தேவைகளையும் ஏற்பாடு செய்பவன் ஒருவன் இருக்கிறான் எனில், தனது அந்த எசமானனின் திருப்திக்காக அவனுக்குக் கட்டுப்பட்டு, தனது வாழ்வு இன்னும் வாழ்வு சம்பந்தப்பட்ட அனைத்து விஷயங்களையும் உபயோகிப்பது தான் ஓர் உண்மை மனிதனின் கடமை.

தனது வாழ்வை அந்த ஏக அதிபதியின் ஆணைக்குக் கட்டுப்பட்டு கழிக்காத ஒருவன் "மனிதன்" என்று சொல்லப் படுவதற்கே அருகதையற்றவன்.

## ஒரு மாபெரும் சத்தியம்

அந்த சத்திய எசமானன், தனது சத்திய வேதம் திருமறையில் நமக்கு ஒரு சத்தியத்தை எடுத்துக் கூறியுள்ளான்.

"ஒவ்வொரு (உயிருள்ள) ஆன்மாவும், மரணத்தை ருசித்தே தீர வேண்டும். பிறகு நீங்கள் நம்மிடம் திரும்பி வர நேரிடும்" (அல்அன்கபூத் : 58)

இவ்வசனத்தில் இரு பகுதிகள் உள்ளன : முதலாவது – ஒவ்வொரு உயிருள்ளவையும், மரணத்தை ருசிக்க வேண்டும். இந்த கருத்தை எல்லா சமயத்தினரும், எல்லா துறையினரும், எல்லா இடத்தினரும், காலத்தவரும் நம்பியுள்ளனர். இன்னும் சொல்லப்போனால் மதத்தை ஏற்காதவரும் கூட இந்த சத்தியத்திற்கு தலைசாய்க்கிறார். மிருகங்கள் வரையிலும் கூட மரணத்தின் உண்மையை உணர்ந்திருக்கின்றன. எலி, பூனையைக் கண்டு ஓடுகிறது. நாயும் கூட பாதையில் வரும் ஏதேனும் வண்டியைப் பார்த்து ஓடி விடுகிறது. ஏனெனில் அவற்றிற்கும் மரணத்தின் மீது நம்பிக்கையுண்டு.

## மரணத்திற்குப் பின்

இவ்வசனத்தின் இரண்டாம் பகுதியில், திருமறை ஒரு மாபெரும் உண்மையின்பால் நம் கவனத்தை திருப்புகிறது. அந்த உண்மை மனிதனுக்குப் புரிந்துவிட்டால், முழு உலகின் சூழ்நிலையே மாறிவிடும். "நீங்கள் மரணத்திற்குப்பின் என்னிடமே திருப்பப்படுவீர்கள். இவ்வுலகில் எப்படி செயல்பட்டிருந்தாலும், அதற்கேற்ப பிரதி பலன்கள் பெறுவீர்கள்" என்பது தான் அந்த உண்மை.

மரணமடைந்தபின் நீங்கள் அழுகி மண்ணில் மக்கிப்போய் விடுவீர்கள். பிறகு மீண்டும் எழுப்பப்பட மாட்டீர்கள் என்பதுமில்லை அல்லது மரணத்திற்குப்பின் உங்களின் உயிர் வேறொரு உடலில் புகுந்துகொள்ளும் என்பதுமில்லை. இக்கண்ணோட்டம் மனித அறிவின் உரைகல்லில் உரசிப்பார்க்க முடியாத ஒன்று.



முதலாவதாக இந்த மறுபிறவிக் கொள்கை எந்த வேதங்களிலும் இடம் பெறவில்லை. பிற்கால மதபுராணங்களில், கூறப்பட்டுள்ளதாகத் தெரிகிறது. அதன் மூலம் மனிதனின் இயற்கை மூலக்கூறுகளில் எழுதப்பட்டுள்ள சந்ததிகளின் பண்புகள், தந்தையிடமிருந்து மகனுக்கும், மகனிடமிருந்து அவனது மகனுக்கும் மாறிமாறி வருகிறது என்பது தான் விளங்குகிறது.

ஆனால் இக்கண்ணோட்டத்தின் மூலம் சாத்தான், மதத்தின் பெயரால் மக்களை மேல்ஜாதி, கீழ்ஜாதி என்ற பிரிவினையை ஏற்படுத்தலானான். மதத்தின் பெயரால், சூத்திரர்களிடம் வேலை வாங்கவும், அவர்களை மட்டமாகக் கருதவும் செய்யும் மதக் குத்தகைதாரர்களிடம், சமூகத்தின் ஒடுக்கப்பட்டசாரர் "எம்மைப் படைத்த இறைவன் எல்லா மனிதர்களுக்கும் கண், காது, மூக்கு எல்லாவற்றையும் சரி சமமாகப் படைத்துள்ள போது, நீங்கள் உங்களை உயர் ஜாதியாகவும், எங்களை கீழ் ஜாதியாகவும் எப்படி ஆக்கினீர்கள் ? " என்று வினா தொடுத்த போது அவர்கள் மறுபிறவிக் கொள்கையை சாக்காகக்காட்டி "உங்களின் முந்தைய வாழ்வின் செயல்கள் உங்களை கீழ்த்தரமாக ஆக்கிவிட்டது" என்று கூறினார்கள்.

இந்த கண்ணோட்டத்தில், மனித உயிர்கள் அனைத்தும் மீண்டும் பிறக்கின்றன. தம் செயல்களுக்கேற்ப மறு உருவங்களாக மாறி வருகின்றன. மிக மோசமான செயல் புரிந்தவர்கள் மிருகங்களின் உருவிலும், இன்னும் மோசமாக செயல்பட்டவர்கள் தாவரங்களின் உருவிலும், புகுந்து விடுவார்கள். நற்செயல்கள் புரிந்தவர்கள் மறு பிறவிச் சிக்கலில் இருந்து மோட்சம் அடைந்து கொள்கிறார்கள் என்ற கருத்து அடங்கியுள்ளது.

## மறு பிறவிக் கொள்கைக்கு எதிரான மூன்று ஆதாரங்கள்

❖ இது தொடர்பாக மிகப்பெரும் விஷயம் யாதெனில், முழு உலகின் அறிஞர்கள், அறிவியல் ஆய்வாளர்களின் ஏகோபித்த கூற்று "இப்பூமியில் முதன்முதலாக தாவரங்கள் முளைத்தன. பிறகு உயிரினங்கள் தோன்றின. அதன் பிறகு கோடிக்கணக்கான ஆண்டுகளுக்குப்பின் தான் மனிதன் பிறந்தான்" என்பதாகும். இப்போது மனிதன் இன்னும் பூமியில் பிறக்கவே இல்லை எனும் போது, எந்த மனித உயிரும் இன்னும் எந்த தீய செயலையும் செய்யவில்லை எனும் போது, எந்த உயிர்கள் தாவரங்களாகவும், மிருகங்களாகவும் மறுபிறவி எடுத்தன?

❖ இரண்டாவதாக, இந்த கண்ணோட்டத்தை ஏற்றுக் கொண்ட பின், இந்த பூமியில் உயிரினங்களின் எண்ணிக்கை தொடர்ந்து குறைந்துகொண்டே வந்திருக்க வேண்டும் என்றும், மறுபிறவியிலிருந்து விமோட்சனம் பெற்றுக் கொண்ட உயிர்களும் குறைந்து கொண்டே இருந்தன என்றும், ஏற்றுக் கொள்ள வேண்டியதிருக்கும். ஆனால் இவ்வளவு பெரிய இந்த பூமியில் மனிதர்கள் எல்லா வகை மிருகங்கள், தாவரங்களில் தொடர்ந்து வளர்ச்சி ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது என்பது தான் நம் முன் உள்ள நிதர்சன உண்மை



❖ மூன்றாவதாக உலகில் பிறப்பவர்கள் இன்னும் இறப்பவர்களின் எண்ணிக்கையில் வானம், பூமியின் வித்தியாசம் காணப்படுகிறது. இறக்கும் மனிதர்களை ஒப்பிட்டு, பிறக்கும் குழந்தைகளின் எண்ணிக்கை எவ்வளவோ கூடுதலானது. சில வேளை கோடிக்கணக்கில் குழந்தைகள் பிறக்கின்றன. ஆனால் இறப்பவர்கள் அதை ஒப்பிடுகையில் மிகக் குறைவாகவே உள்ளனர் என்பதையும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

சிலவேளை, சில குழந்தைகளைப்பற்றி , அவை தாம் முன்பு இருந்த இடத்தைப்பற்றி அடையாளம் தெரிந்து கொள்கின்றன. தமது பழைய பெயர்களையும் சொல்லிக் காட்டுகின்றன என்றும், மேலும் அவை புதிய பிறவி எடுத்திருக்கின்றன என்பதைப் பற்றியும் பிரபலப்படுத்தப்படுகிறது. ஆனால் இவையெல்லாம் சாத்தான் பேய்களின் வேலையாகும். அவை குழந்தைகளின் தலையில் ஏறிக்கொண்டு பிதற்றுவதாகும். மேலும் மனிதர்களின் மார்க்க உணர்வையும் இறை விசுவாசத்தையும் கெடுக்கும் வழியாகும்.

உண்மை யாதெனில், மனிதன் மரணித்தபின் தன் எசமானிடம் செல்கின்றான். மேலும் இவ்வுலகில் அவன் எப்படி செயல்பட்டானோ, அதற்கேற்ப தண்டனையையும் அல்லது நல்ல பிரதிபலனையும் பெறுவான் என்ற சத்தியம் மரணத்திற்குப்பின் ஒவ்வொரு மனிதனுக்கு முன்பும் கட்டாயம் நிகழும்.

## செயல்களுக்கேற்பவே பலன் கிடைக்கும்

நற்செயல் புரிந்தான் எனில், நன்மையின் வழியில் சென்றான் எனில், அவன் சுவனம் செல்வான். சுவனம் அங்கு எல்லாவித சுகங்களுக்கானவை இருக்கும். எத்தகைய சுகங்களும், சொகுசுகளும் அங்கேயிருக்கும் எனில், அவற்றை இவ்வுலகில் எந்த கண்களும் கண்டிருக்காது, எந்த காதும் கேட்டிருக்காது. எந்த மனதிலும் அதன் கற்பனை ஏற்பட்டிருக்க முடியாது.

சுவன அருட்கொடைகளில் மிகப்பெரிது சுவனவாசிகள் அங்கே தமது எசமானனை தம் கண்களால் கண்டுகளிப்பார்கள். அதற்கு ஈடான மகிழ்வும் குதூகலமும் வேறு எதிலும் இருக்காது. இவ்வாறே தீய செயல் புரிந்தவர்கள், பாவம் புரிந்து தன் எசமானுக்கு மாறு புரிந்தவர்கள் நரகில் போடப்படுவார்கள். அதில் அவர்கள் நெருப்பில் எரிவார்கள். அங்கு அவர்களுக்கு பாவத்திற்குரிய தண்டனை கிடைக்கும்.

மேலும் மிகப்பெரிய தண்டனை யாதெனில் அவர்கள் தம் எசமானின் தரிசனம் கிடைக்காது போவார்கள். மேலும் அவர்களுக்கு, அவர்களின் எசமானனின் வேதனை மிக்க தண்டனை கிடைக்கும்.

## இறைவனுக்கு இணைவைத்தல் மிகப்பெரிய பாவம்

அந்த சத்திய இறைவன் தன் திருமறை குர்ஆனில், நற்காரியங்கள் சிறிதும், பெரிதும் உள்ளன என்றும், அவ்வாறே அவனிடம் பாவங்கள், தீச்செயல்கள் என்பதும், சிறியதும், பெரியதுமாக உள்ளன என்றும் கூறியுள்ளான்.



நம்மை மிகப்பெரும் தண்டனைக்கு ஆளாக்கும் குற்றம், அதை அவன் ஒரு போதும் மன்னிப்பதில்லை. அதை செய்தவன் என்றும் நரகில் எரிவான், அவனுக்கு மரணமும் அங்கு நிகழாது. அது தான், தனது ஏக வல்லவனாம் எசமானனுக்கு இணை கற்பித்தலாகும். மேலும் அவனைத்தவிர, யாரின் முன் தலை வணங்குவதும், யாருக்கு முன் தன் கரங்களைக் கூப்புவதும் அவனைத் தவிர வேறு யாரையும் வணங்க பூஜிக்கத் தகுதியானதாகக் கருதுவதும், மரணிக்கச் செய்பவன், உயிர் கொடுப்பவன், உணவளிப்பவன், இலாபம்-நஷ்டம் விளைவிப்பவன் என்று யாரையும் நம்புவதும், மிகப்பெரும் பாவமும், எல்லையற்ற அநீதியாகும்.

அப்படி எந்த தேவர் தேவியை நினைத்தாலும் சரி, சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் அல்லது எந்த துறவி, மகான், சாதுவை நினைத்தாலும் சரி, அந்த சத்திய எசமானைத் தவிர யாரையும், வணக்கத்திற்குரியவனாகக் கருதுதல் இணை வைத்தலாகும். அதை அந்த எசமான் ஒரு போதும் மன்னிக்க மாட்டான். இதைத் தவிர வேறு எல்லா பாவங்களையும், அவன் நாடினால் மன்னிக்கலாம். அந்த பாவங்களை நமது அறிவும், அந்த அளவு கெடுதியாகவே கருதுகிறது. அச்செயலை நமது மனமும் அவ்வளவாக விரும்புவதில்லை.

## ஓர் உதாரணம்

உதாரணமாக ஒருவரின் மனைவி பெரும் சண்டைக்காரி பேச்சுக்குப் பேச்சு திட்டி ஏசுபவள், சொல்வது எதையும் கேட்காதவள் தான். எனினும் அவன், அவளை வீட்டை விட்டு வெளியே போய் விடச் சொன்னால், நான் உன்னுடையவளாக இருக்கிறேன்.

இனியும், உன்னுடையவளாகவே இருப்பேன். உன் வாசற்படியிலேயே செத்து மடிவேன். கண் இமைக்கும் நேரமும், வீட்டை விட்டு வெளியே செல்ல மாட்டேன் என்று அவள் கூறினால், கணவன் எவ்வளவுதான் கோபமுற்றிருந்தாலும், அவளைத் தக்கவைத்துக்கொள்ள நிர்பந்தமாகிவிடுவான். இதற்கு மாறாக ஒருவரின் மனைவி நல்ல பணிவிடை செய்பவள் ஆணைக்கு அடி பணிபவள், அவள் எந்நேரமும் அவனை கவனித்துக் கொள்கிறவள். கணவன் நடுநிசியில் வீட்டிற்கு வந்தாலும், அவனுக்காக காத்திருக்கிறாள். அவனுக்காக சூடாக உணவு பரிமாறுகிறாள். பாச, நேச வார்த்தை பேசுகிறாள்.

ஆனால் ஒரு நாள் அவள், கணவனிடம் "நீங்கள் என் வாழ்க்கைத் துணைவர் எனினும் எனக்கு உங்களால் மட்டும் காரியம் நடப்பதில்லை. எனவே இன்று முதல் பக்கத்து வீட்டுக்காரரையும் என் கணவனாக ஆக்கிக் கொள்கிறேன்" என்று கூறினால்...

அந்த கணவனிடம் சிறிதேனும் ரோஷம் இருப்பின், இதை ஒருபோதும் தாங்கிக் கொள்ளமாட்டான். ஒன்று தன் மனைவியின் உயிரைப் பறிப்பான் அல்லது தானே செத்து விடுவான். இது ஏன்? ஏனெனில் எந்த ஒரு கணவனும், கணவன் என்ற ரீதியில் தனது தனிப்பட்ட கடமைகளில் யாரையும் பங்காளியாகப் பார்க்க விரும்பமாட்டான்.

ஒரு துளி இந்திரியத்தில் படைக்கப்பட்ட நீங்கள், உங்களுக்கு ஒரு பங்காளி இருப்பதை முற்றிலும் விரும்புவதில்லை எனில், இந்த அசுத்தத் துளியிலிருந்து மனிதனை படைத்த எசமான் இந்த முழு உலகிலும் யாருக்கு எதுவெல்லாம் கிடைத்துள்ளதோ அது அவன் வழங்கியது தானே !

இப்படி இருக்க தனக்கு ஒரு பங்காளி இருப்பதை (அவனுடன் வேறு யாரையும் வணங்கப்படுவதை) அவன் எப்படி ஏற்றுக்கொள்வான் ?



ஒரு வேசிப்பெண் தன் மானம், மரியாதையை விற்று வருபவர்கள் எல்லாம் தன் மீது அதிகாரம் அளித்து விடுவதன் காரணமாக, அவள் நம் பார்வையில் எப்படி கீழானவளாகி விடுகிறாளோ, இதே போன்று தான், தன் அசல் எசமானை விட்டு விட்டு வேறு யாரையும் வணங்குவதில் லயித்துப் போய் விடுபவன் தன் எசமானின் பார்வையில் இவளை விடவும் மிக கேவலமானவனாக, அற்பனாக ஆகிவிடுகின்றான்.

## திருமறை குர்ஆனில் சிலை வணக்கம் பற்றி

திருமறையில் சிலை வணக்கம் புரிவது பற்றி ஓர் உதாரணம் கூறப்பட்டுள்ளது. மிகவும் சிந்திக்கத் தக்கது.

"அல்லாஹ்வை விட்டுவிட்டு நீங்கள் வணங்கும் தெய்வங்கள் அனைத்தும் ஒன்று சேர்ந்து ஒரே ஒரு ஈயைக்கூட படைத்ததில்லை. படைக்கவும் முடியாது. ஈயைப்படைப்பது இருக்கட்டும். அவைகளின் முன்பாக படைக்கப்பட்ட பிரசாதப் பொருட்களில் இருந்து எதையேனும் ஈக்கள் எடுத்துச் செல்கையில் அவற்றை விரட்டி, அப்பொருளைத் திரும்பப் பெறக்கூட முடியாது எனில், அத்தெய்வங்கள் எத்தகைய கோழைகள் ! அதன் பக்தர்கள் எத்தகைய பலவீனர்கள் ! (பாருங்கள்.) மேலும் அவர்கள் அல்லாஹ்வை எப்படி மதிக்க வேண்டுமோ அப்படி மதிக்கவில்லை, அவன் வல்லவனும், வலிமை மிக்கவனுமாவான்." (அல்ஹஜ்ஜு : 73)

என்ன ஒரு அருமையான உதாரணம் ! படைப்பவனோ அல்லாஹ் ஒருவன் மட்டுமே ! நம் கைகளால் உருவாக்கப்பட்ட சிலைகளை நாம் தான் படைத்தோம். அப்படி இருக்க அந்த சிலைகளுக்கு சற்றேனும் அறிவு இருந்தால் அவை தான் நம்மை வணங்க வேண்டுமே தவிர, நாம் அவற்றை வணங்குவது எவ்வளவு பெரிய அறிவீனம் !

## ஓர் அற்பமான சிந்தனை

சிலர் கூறுவது போல, "நாம் அந்த சிலைகளை வணங்குவது, அவர்கள் தான் நமக்கு எசமானின் பாதையைக் காட்டினார்கள். அவைகளின் பொருட்டினால் தான், நாம் எசமானின் அருட்கொடைகளைப் பெற்றோம் என்பதற்காகத்தான்" என்கிறார்கள். ஆனால் இக்கூற்று எத்தகையது எனில் ஒருவன் சுமை தூக்குபவனிடம் தொடர் வண்டியைப் பற்றி விபரம் கேட்டான். அவன் அது பற்றி விபரம் கூறிய பின், தொடர் வண்டியில் ஏறுவதற்கு பதில், தொடர்வண்டி பற்றி விபரம் கூறினார் என்பதற்காக, சுமை தூக்குபவன் மீதே ஏறிக்கொண்டது போன்றதாகும்.

இவ்வாறே, அல்லாஹ் பற்றிய சரியான பாதை திசைக் காட்டியவர்களையே வணங்க முற்படுவது, தொடர் வண்டியை விட்டுவிட்டு, சுமை தூக்குபவர்களின் மீது சவாரி செய்வதாகும். சிலரோ, "நாம் வெறும் மனதை ஒருமைப்படுத்தவும், சிந்தனையை மையப்படுத்தவுமே, இந்த சிலைகளை வைத்துக் கொள்கிறோம் !" என்று கூறுகிறார்கள். இது எப்படியென்றால், பெற்ற தந்தையாரின் நினைவை நிலைப்படுத்த, முன்னால் நாயை வைத்துக்கொண்டு நாயையே உற்று நோக்கிக் கொண்டிருப்பது போன்றாகும்.

தந்தையின் மதிப்பு எங்கே? அதற்கு முன் நாயின் நிலை எங்கே? இந்த பலவீனமான சிலை எங்கே? எல்லையற்ற வல்லமை படைத்தவனும், அன்பாளனும், அருளாளனும், கருணையாளனுமாகிய அந்த எசமானின் உயர் அந்தஸ்து எங்கே? இதனால் மன ஓர்மை நிலைபெறுமா? அல்லது நிலை குலையுமா? சிந்தித்து பாருங்கள் !



ஆக, எவ்விதத்திலும், யாரையும் அவனுக்கு இணை வைத்தல் மிகப்பெரும் பாவமாகும். அதை இறைவன் ஒருபோதும் மன்னிப்பதில்லை. இத்தகையவன் என்றைக்கும் நரகின் எரி கொள்ளியாவான்.

## நன்மையில் மிகச் சிறந்தது இறை விசுவாசமே!

இவ்வாறே மிகச் சிறந்த நற்காரியம் இறை விசுவாசம் (ஈமான்) தான். இது பற்றி, உலகின் எல்லா மதத்தவரும் கூறுவது... "எல்லாவற்றையும் இங்கே விட்டுச் செல்ல நேரிடும், மரணித்தபின் மனிதனுடன் வெறும் இறை விசுவாசம் மட்டுமே செல்லும்" என்பதாகும்.

இறை விசுவாசம் அல்லது இறை விசுவாசி என்றால், உரிமையாளருக்கு அவரது உரிமையை வழங்குபவருக்குச் சொல்லப்படும். உரிமையை மறுப்பவரையும் பாழ்படுத்துவரையும் அநியாயக்காரன் எனப்படும்.

அந்த மனிதனின் மீது அவனைப் படைத்தவனுக்குச் செய்யும் கடமைதான் மிகப் பெரியது. ஏனெனில் அவன் எல்லாவற்றையும் படைத்தவன், பரிபாலிப்பவன். வாழ்வு, மரணம் கொடுக்கும் எசமானன், இரட்சகன். வணக்க வழிபாடுகளுக்கு அவன் மட்டுமே உரித்தானவன்.

எனவே, அவனையே வழிபட வேண்டும், அவனே எசமானன். லாபம், நஷ்டம், கண்ணியம், கேவலம் தருபவன் என நம்ப வேண்டும். இன்று கிடைத்துள்ள வாழ்க்கையை அவனது பொருத்தம், இன்னும் கட்டுப்படுவதுடன் கழிக்கப்பட வேண்டும். அவனையே நம்ப வேண்டும். அவனுடையதையே ஏற்று நடக்க வேண்டும். இதற்குப் பெயர் தான் இறை விசுவாசம் (ஈமான்) எனப்படும்.

அவன் ஒருவன் மட்டுமே எசமானன் என்பதை ஏற்காமல், அவனுக்கு மட்டுமே வழிபடாமல், மனிதன் இறை விசுவாசியாக முடியாது. மாறாக, அவன் இறை விசுவாசமற்றவன் எனப்படுவான். அசல் எசமானின் விசுவாசம் கடமை மறந்து, மற்றவர்கள் முன் விசுவாசம் காட்டுதல் என்பது. ஒரு கொள்ளைக்காரன் பெரும் கொள்ளையடித்து செல்வந்தனாகி, அதன் மூலம் கடை வைத்து உட்கார்ந்திருக்கையில் ஒரு வாடிக்கையாளனிடம், உங்களின் ஒரு பைசா கணக்குக்கு மேல் என்னிடம் வந்துவிட்டது, அதை வாங்கிக்கொள்ளுங்கள் என்று விசுவாசம் காட்டுவது போன்றதாகும்.

இவ்வளவு பெரும் செல்வம் கொள்ளியடித்த பின் ஒரு பைசா கணக்குக்காட்டும் விசுவாசம் போன்றது தான், தன் எசமானை விட்டுவிட்டு வேறு யாரையும் வணங்குவது. இன்னும் சொல்லப்போனால், அதைவிடவும் கேடுகெட்ட விசுவாசமாகும்.

இறை விசுவாசம் என்பது, தன் எசமானை மட்டும் ஏற்று, அவனுக்கு மட்டும் வணக்கம் புரிவதும், அதன் மூலம் வாழ்வின் ஒவ்வொரு விநாடியும் தன் எசமானின் திருப்தியுடன் இன்னும் அவனது உத்தரவுகளை ஏற்று நடப்பதுடன் கழிக்க வேண்டும் என்பது மட்டும் தான். அவனால் வழங்கப்பட்ட வாழ்வை அவனது பொருத்தத்திற்கேற்ப கழிப்பது தான் "**சன்மார்க்கம் தீன்**" எனப்படும். அவனது கட்டளைகளை ஏற்று நடக்காமலிருத்தல் மார்க்கமின்மையாகும்.

## சத்திய மார்க்கம்

சத்திய மார்க்கம் ஆரம்பம் முதல் ஒன்றே ஒன்றுதான். அதன் போதனை யாதெனில், அந்த ஏக நாயனை மட்டுமே இறைவனாக ஒப்புக்கொண்டு, அவனது கட்டளைகளை ஏற்று நடக்க வேண்டும்.



திருமறை குர்ஆனில், மார்க்கம் என்பது அல்லாஹ்விடம் இஸ்லாம் மட்டுமேயாகும். இஸ்லாமைத் தவிர எந்த மார்க்கத்தை மேற்கொண்டாலும் அதை ஏற்றுக்கொள்ளப் படமாட்டாது. ( ஆல இம்ரான் : 85) என்று கூறப்பட்டுள்ளது.

மனித பலவீனம் யாதெனில், அவனது பார்வை ஒரு குறிப்பிட்ட எல்லைவரையே பார்க்க முடியும். அவனது செவி, ஒரு குறிப்பிட்ட அளவையே கேட்க முடியும். அவனது நுகரும், ருசிக்கும், தொடும் சக்திகளும் வரையறுக்கப்பட்டுள்ளன. இந்த ஐம்புலன்களால் அவனது அறிவுக்கு விபரங்கள் கிடைக்கின்றன. இவ்வாறே அறிவின் செயல்பாடும் வரையறைக்குள் தான் உள்ளது.

அந்த எசமான் எவ்விதமான வாழ்வை விரும்புகிறான், அவனை எப்படி வணங்க வேண்டும்? மரணத்திற்குப்பின் என்ன நிகழும்? சுவனம் நரகிற்கு இட்டுச் செல்லும் செயல்கள் யாவை? இவற்றையெல்லாம் மனித அறிவும், மனிதனும் தானாகப் புரிந்து கொள்ள முடியாது.

## இறைத் தூதர்

மனிதனின் இந்த பலவீனத்தின் மீது இரக்கப்பட்டு, அந்த எசமான் இறைத்தூத பதவிக்குப் பொருத்தமாக தேர்வு செய்த, அந்த மகத்தான தூய மனிதர்கள் மீது தன் வானவர்களின் மூலம் தன் தூதை இறக்கி வைத்தான். அவர்கள் மனிதனுக்கு வாழ்வதற்கும், வணங்குவதற்குமுள்ள வழிகளைக் காட்டிக் கொடுத்தார்கள். தம் சுய அறிவால் புரிய முடியாத வாழ்வின் யதார்த்தங்களை சொல்லிக் கொடுத்தார்கள்.

அத்தகைய மாமனிதர்களைத்தான் நபி "**இறைத்தூதர்கள்**" எனப்படுகிறது. அவர்கள் மீது இறைத்தூது அவதரித்தது என்பதால், அவர்கள் அவதாரம் என்று கூட சொல்லலாம்.

ஆனால், இன்று அவதாரம் என்றால் இறைவனே அல்லது அவரது வடிவில் இறைவன் இறங்கியுள்ளான் என்று கருதப்படுகிறது. இது கண்மூடித்தனமான நம்பிக்கை. இது மாபெரும் பாவம். இந்த குருட்டுத்தனமான நம்பிக்கை, ஒரு எசமானின் வணக்கத்திலிருந்து அகற்றி மனிதனை சிலை வணங்கும் சதுப்பு நிலத்தில் சிக்கவைத்து விட்டது.

மக்களுக்கு சத்திய வழிகாட்டுவதற்கென அல்லாஹ் தேர்வு செய்த இந்த மாமனிதர்கள், ஒவ்வொரு ஊருக்கும், பகுதிக்கும், காலத்திற்கும் வந்து கொண்டிருந்தார்கள். அவர்கள் அனைவரும் ஓர் இறையையே நம்பினர். அவனுக்கு மட்டுமே வணக்கம் புரியவும், அவனது விருப்பப்படி வாழ்வின் எந்த வழிமுறைகளை (ஷரிஅத் மார்க்க சட்டங்களை) அவர்கள் கொண்டு வந்தார்களோ அவற்றைக் கடைபிடிக்கவும் கூறினார்கள். அவர்களில் எந்த ஒரு தூதரும் ஓர் இறைவனைத் தவிர வேறு யாரையும் வணங்க அழைக்கவில்லை. மாறாக அவர்கள் இந்த பாவத்திலிருந்துதான் மக்களை அதிகமாக தடுத்தார்கள். அவர்களின் பேச்சை மக்கள் நம்பினார்கள். மேலும் சத்திய பாதையில் பயணிக்கலானார்கள்.

## சிலை வணக்கத்தின் ஆரம்பம்

இத்தகைய இறைத்தூதர்கள் அனைவரும், இன்னும் அவர்களைப் பின்பற்றியவர்களும், மனிதர்களாகவே இருந்தனர். அவர்களை மரணம் தழுவிக்கொண்டிருந்தது (மரணம் தழுவாதவன் இறைவன் ஒருவன் மட்டுமே).

நபி இறைத்தூதரின் மரணத்திற்குப் பின் அவர்களை ஒப்புக்கொண்டவர்களுக்கு அவ்வப்போது அவர்களின் நினைவு ஏற்பட்டது. மேலும் அவர்களின் நினைவால் மிகவும் அழுது கொண்டிருந்தார்கள். சாத்தானிற்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் கிடைத்துவிட்டது.



அவன் மனிதனின் தீராப் பகைவன். மனிதனை சோதிப்பதற்காக அந்த எசமான், யார் தன்னைப் படைத்த எசமானை நம்புகின்றனர்? யார் சாத்தானை நம்புகின்றனர்? என்பதைப் பார்ப்பதற்காக மனிதனை வழி கெடுக்கவும், தீய உணர்வுகளை அவனது மனதில் போடவும், சாத்தானிற்கு துணிவு கொடுத்தான். சாத்தான் மனிதர்களிடம் வந்து, உங்களுக்கு உங்களின் இறைத்தூதர் மீது அளவு கடந்த அன்புள்ளது. மரணத்திற்குப்பின் அவர் உங்களது பார்வையிலிருந்து மறைந்துவிட்டார். எனவே அவருக்கு ஒரு சிலை வடிக்கிறேன். அதைப்பார்த்து நிம்மதி பெறலாம் என்று கூறினான். சாத்தான் சிலை வடித்து விட்டான். அவர்களின் மனம் நாடும் போது முதலில் அதைச் சென்று பார்த்து வந்தார்கள். சன்னம், சன்னமாக சிலைகளின் பற்று அவர்களின் மனதில் பதிந்து விட்டதைக்கண்ட சாத்தான், "நீங்கள் இந்த சிலைக்கு முன் சிரம் தாழ்த்தினால், இந்த சிலைக்குள் இறைவனைக்காண்பீர்கள்" என்றான். மனித மனதில் ஏற்கனவே சிலை பற்று இடம்பிடித்து விட்டது.

எனவே, சிலைக்கு சிரம் பணியவும், அதை பூஜிக்கவும் ஆரம்பித்துவிட்டான். அந்த மனிதன் அவன் வணங்குவதற்கு இறைவன் மட்டுமே அருகதையுள்ளவனாக இருக்க சிலைகளை பூஜிக்கலானான். இணை வைப்பில் சிக்கிவிட்டான். இந்த முழு உலகின் தலைவன் (மனிதன்), கல், மண்ணிற்கு முன் தன் சிரம் தாழ்த்தலான போது இழிவு கேவலமடைந்தான்.

தன் எசமானின் பார்வையிலிருந்து வீழ்ந்து நிரந்தரமாக நரகின் எரிகொள்ளியாகிவிட்டான். இதன் பின்பும் அல்லாஹ் மீண்டும் தன் தூதர்களை அனுப்பினான். அவர்கள் மக்களை சிலை வணக்கத்திலிருந்து அல்லாஹ்வைத் தவிர உள்ள எல்லாவற்றையும் பூஜிப்பதிலிருந்து தடுத்தார்கள்.

சிலர் அவர்களின் பேச்சை ஏற்றுக்கொண்டனர். சிலர் மாறுபுரிந்தனர். ஒப்புக்கொண்டவர்கள் மீது அல்லாஹ் மகிழ்வு கொண்டான். அவர்களின் அறிவுரைகளுக்கு மாறு புரிந்தவர்களை அழித்து ஒழிக்க வானத்திலிருந்து முடிவுகளை இறக்கினான்.

## இறைத் தூதர்களின் இனிய போதனை

ஒருவரின் பின் ஒருவராக இறைத்தூதர்கள் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களின் மார்க்க அடிப்படை ஒன்றாகவே இருந்தது. அவர்கள் ஒரு மார்க்கத்தின்பால் அழைப்புக்கொடுத்து வந்தார்கள். அதாவது, ஓரிறைவனை ஒப்புக்கொள்ளுங்கள்! யாரையும் அவனது உள்ளமை பண்புகளில் இணையாக்காதீர்கள். அவனது வணக்கத்தில் யாரையும் பங்காளியாக்காதீர்கள்.

அவனது தூதர்கள் அனைவரையும் உண்மையாளர்கள் என நம்புங்கள். அவனது வானவர்கள் அவர்கள், அவனது பரிசுத்த படைப்பு. அவர்கள் உண்ணவும், பருகவும், உறங்கவும் மாட்டார்கள். எல்லா வேலைகளிலும் எசமானின் ஆணைக்கு அடிபணிந்து நடப்பவர்கள், அவர்களை உண்மையானவர்கள் என நம்புங்கள். அவன் தனது வானவர்கள் மூலமாக அனுப்பிய வஹீவேத அறிவிப்பு, இன்னும் இறக்கிய வேத நூல்கள் அனைத்தும் உண்மையானவை என்று நம்புங்கள்.

மரணித்தபின் மீண்டும் ஒரு நாள் உயிர்பெற்று, தான் செய்த நல்ல, கெட்ட செயல்களின் பிரதிபலன் பெற வேண்டும் என்பதையும், மேலும் இறை விதியில் உள்ள நல்லது, கெட்டது யாவும் எசமானின் புறத்திலிருந்து முடிவு செய்யப்பட்டுள்ளவை என்பதையும் நம்புங்கள்! மேலும் நான் இப்போது கொண்டு வந்துள்ள வாழ்வதற்கான வழிகள் ஷரீஅத் சட்டங்களின்படி நடங்கள் என்று போதித்தார்கள்.

உலகில் தோன்றிய இறைத்தூதர்கள் அனைவரும் உண்மையாளர்களாகவே இருந்தனர். அவர்கள் மீது இறங்கிய வானவேதங்கள் அனைத்தும் மெய்யானவையே.



அவை எல்லாவற்றையும் நாம் நம்புகிறோம். அவர்களிடையே எந்த ஏற்றத் தாழ்வையும் நாம் காட்டமாட்டோம். இதில் உண்மையின் உரைகல் யாதெனில், யாரெல்லாம் ஓர் இறைவனை ஒப்புக்கொள்ள அழைப்பு விடுத்தார்களோ அவர்களின் போதனைகளில் ஓர் இறைவனை விட்டுவிட்டு, வேறு யாரையுமோ அல்லது தன்னையோ பூஜிக்குமாறு சொல்லுதல் இருக்கமுடியாது.

எனவே எந்த மஹா புருஷர்களிடம், சிலை வணக்கம் அல்லது பல தெய்வ வழிபாட்டின் போதனை காணப்படுமோ அவர்கள் ஒன்று இறைத்தூதர்களாக இருக்க முடியாது. அல்லது அவர்களது போதனைகள் பின்னால் மாற்றப்பட்டு விட்டன என்பது தான் அர்த்தம். ஹஜ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு முன் வந்த இறைத்தூதர்கள் அனைவரின் போதனைகளும், மாற்றங்களும் இலக்காகிவிட்டன. சில இடங்களின் வானவேதங்களும் கூட மாற்றப்பட்டுவிட்டுன.

## இறைத் தூதர் ஹஜ்ரத் முஹம்மது [ஸல்]

ஒரு விலை மதிப்பான உண்மை யாதெனில், உலகில் வந்த ஒவ்வொரு இறைத்தூதரின் மூலமும், அவரின் வான ஏடுகள் மூலமும், ஓர் இறுதித்தூதரின் வருகை பற்றி முன் அறிவிப்பு செய்யப்பட்டுள்ளது.

மேலும் அவர்கள் வந்த பின் இன்னும் அவர்களை விளங்கிக்கொண்ட பின், முந்தைய மதங்கள், முந்தய சட்டங்கள் அனைத்தையும் விட்டுவிட்டு, அவர்கள் சொல்வதை கேட்கவேண்டும். அவர்கள் மூலம் கொண்டு வரப்பட்ட வேதம், மார்க்கத்தின் படி நடக்க வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

முன் வேதங்களில் அளவு கடந்த அடித்தல், திருத்தல் இருந்தும், அந்த எசமான் இறுதி தூதரின் வருகைபற்றி செய்தியை மாற்றித் திருத்த அனுமதிக்கவில்லை. ஏனெனில் நமக்கு எதுவும் விபரம் தெரியவில்லை என்று யாரும் சொல்லிவிடக் கூடாதல்லவா? இதுவும் இஸ்லாமின் பரம சத்தியத்திற்கான பலமான ஆதாரமாகும்.

வேதங்களில் இதற்கு "நராஷனஸ்" என்றும், புராணங்களில் "கல்கி அவதாரம்" என்றும், பைபிளில் "பாரகலீத்" என்றும், புத்த கிரந்தங்களில் "இறுதி புத்தர்" என்றெல்லாம் எழுதப்பட்டுள்ளது. அந்த மதநூல்களில் ஹஜ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களின் பிறப்பிடம், பிறப்பு தேதி, நேரம் இன்னும் அநேக புற அடையாளங்கள், அகப் பண்புகள் பற்றியெல்லாம் முன்பே கூறப்பட்டுள்ளன.

## ஹஜ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களின் புனித வாழ்வின் அறிமுகம்

சுமார் 1400 ஆண்டுகளுக்கு முன் கி.பி. 610-ல் இறுதி நபி முஹம்மது (ஸல்) அவர்கள் சவூதி அரேபியாவின் மக்கா நகரில் பிறந்தார்கள். பிறக்கும் சில மாதங்களுக்கு முன்பே அவர்களின் தந்தை மரணமடைந்துவிட்டார். பிறந்த பின் தாயாரும் அதிக நாட்கள் உயிர் வாழவில்லை. முதன்மையாக தாத்தாவும், அவர்களின் மரணத்திற்குப்பின் அவர்களின் பெரியப்பாவும் அவர்களை வளர்த்தார்கள்.

உலகில் எல்லோரிலும் வித்தியாசமாகவும், தனித் தன்மையுடனும், மக்கா வாசிகள் அனைவரின் கண்களுக்கு மின்னும் தாரகையாகத் தோன்றினார்கள். படிப்படியாக வளர, வளர தங்களின் மீது மக்களின் அன்பும், பாசமும் கூடிவிட்டது. தங்களை "உண்மையாளர்", "நாணயமிக்கவர்" என்று கூறலானார்கள்.



மக்கள், தங்களின் விலை உயர்ந்த அமானிதப் பொருட்களைப் பாதுகாப்பிற்காக தங்களிடம் கொடுத்து வைத்தனர். தங்களுக்கிடையே ஏற்படும் பிணக்குகளுக்கு தங்களிடம் தீர்வு பெற்றனர்.

ஒரு முறை மக்காவில் அல்லாஹ்வின் புனித இல்லமாகப் போற்றப்படும் கஅபா புதுப்பிக்கப்பட்டுக் கொண்டிருந்தது. அதன் ஒரு சுவற்றின் மூலையில் ஒரு புனிதக் கல் இடம் பெற்றிருந்தது. கட்டிடம் புதுப்பிக்கையில் அக்கல்லை அதன் இடத்தில் வைக்கப்பட வேண்டிய கட்டம் வந்தபோது, அதன் புனிதம் காரணமாக மக்காவின் சகல கோத்திரத்தாரும், தலைவர்களும், அப்புனிதக்கல்லை வைக்கும் பெருமை தமக்கே கிடைக்க வேண்டும் என்று விரும்பினர். போட்டா, போட்டியில் வாட்கள் உருவப்படலாயின.

அப்போதுதான் ஒரு விவேகமுள்ள மனிதர், "நாளை காலையில் முதன்மையாக கஅபா இல்லத்திற்கு வருபவர் செய்யும் முடிவுப் படி நடந்து கொள்ளலாம்" என்ற தீர்மானம் கூறினார். அனைவரும் ஏற்றுக்கொண்டனர்.

மறுநாள் காலையில் வந்த முதல் மனிதர் முஹம்மது (ஸல்) அவர்கள் தான். எல்லோரும் ஒரே குரலில் ஆஹா! நம்மிடையே மிக "உண்மையாளர்", "நாணயமிக்கவர்" வந்துவிட்டார்! அவரது முடிவை நாம் அனைவரும் முழுமனதுடன் ஏற்போம்! என்றனர்.

சமயோசிதமாக, முஹம்மது (ஸல்) அவர்கள், ஒரு போர்வையை விரித்து, அதில் கல்லை வைத்து சகல கோத்திரத்தாரின் தலைவர்களையும், போர்வையின் ஓரங்களைப் பிடித்துத் தூக்க வைத்தார்கள். சுவற்றிற்கு அருகில் கொண்டு வந்ததும், தாங்கள் தங்களின் கரங்களால் அக்கல்லை எடுத்து உரிய இடத்தில் பொருத்தினார்கள். இதன் மூலம், மூண்டுவிட இருந்த போர் முடிவடைந்து விட்டது.

இவ்வாறே மக்கள் தங்களின் வேலைகள் அனைத்திலும், முஹம்மது (ஸல்) அவர்களை முன் வைப்பார்கள். தாங்கள் பயணம் புறப்பட்டால் மக்கள் நிம்மதி இழந்து விடுவார்கள். பயணம் முடித்துத் திரும்பினால் தங்களைச் சந்தித்து தேம்பித் தேம்பி அழுவார்கள். அந்நேரம் இறை இல்லம் கஅபாவில் 360 சிலைகள் இருந்தன. தேவர், தேவிகளின் சிலைகள் வைக்கப்பட்டிருந்தன. அரபு தேசம் முழுவதும், வம்ச இன குல ஏற்றத்தாழ்வு, தீண்டாமை, பெண்கொடுமை, மது, வட்டி, வம்புச் சண்டை, விபச்சாரம் போன்ற எல்லா பாவ பழிச்செயல்களும் தலைவிரித்துத் தாண்டவமாடின.

முஹம்மது (ஸல்) அவர்கள் தமது நாற்பதாம் வயதை அடைந்த போது, அல்லாஹ் தன் வானவர் மூலம் திருமறை வேதம் குர்ஆனை இறக்க ஆரம்பித்தான். தாங்களை இறைத்தூதராகத் தேர்வு செய்த நற்செய்தியை அறிவித்தான். மேலும் மக்களை ஏகத்துவத்தின்பால் அழைக்கும் பொறுப்பை ஒப்படைத்தான்.

### உண்மையின் குரல்

தாங்கள் மக்காவின் ஒரு மலைக்குன்றின் மேல் ஏறி ஒரு குரல் கொடுத்தார்கள். அக்குரல் கேட்டு மக்கள் அனைவரும், இது ஓர் உண்மையாளர், நாணயமிக்கவரின் குரல் என்பதற்காக, ஒன்று திரண்டு விட்டார்கள். "இந்த மலையின் பின்புறத்திலிருந்து ஒரு பெரும் படை வந்து கொண்டிருக்கிறது. மேலும் அது உங்களைத் தாக்கவிருக்கிறது என்று நான் சொன்னால் நீங்கள் நம்புவீர்களா?" என்று மக்களிடம் கேட்டார்கள்.

அதற்கு அனைவரும் ஒரு குரலாக தங்களின் கூற்றை யார் நம்பாமலிருப்பார்கள். தாங்கள் ஒருபோதும் பொய்யுரைத்ததில்லை! மேலும் மலை உச்சியில் இருந்து கொண்டு மறுபக்கதை நீங்கள் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள் ! என்றார்கள்.



அதன்பின் தாங்கள் மக்களை சத்திய இஸ்லாமின்பால் அழைத்தார்கள். சிலை வணக்கத்தை விட்டுவிடுமாறு கூறினார்கள். மரணத்திற்குப் பின் நரக நெருப்பைப் பற்றி எச்சரித்தார்கள்.

### மனிதனின் ஒரு பலவீனம்

என்னதான் அறிவும், ஆதாரமும் மறுத்தாலும், தான் மதிக்கும் போற்றும் மகான்களின் தவறான கூற்றுக்களைக் கூட கண்ணை மூடிக்கொண்டு நம்பிவிடும் ஒரு பலவீனம், மனிதனில் இயல்பாக உண்டு. எனினும் இப்படியிருந்தும் மனிதன் தனது மூதாதையர்களின் வழிமுறைகளின் மீது உறுதியுடன் நிலைத்திருப்பான். அதற்கு மாறாக செயல்படுவது என்ன? அதைப்பற்றி எதையும் கேட்கவும் இசையமாட்டான்.

### தடைகளும், சோதனைகளும்

இதன் காரணமாகத்தான், நாற்பதாண்டுகளாக, தங்களை மதித்து வந்தும், மெய்யர் என்றும் அறிந்து ஏற்றும் கூட, மக்காவாசிகள் தங்களின் போதனைகளுக்கு எதிராகி விட்டார்கள். தாங்கள் எவ்வளவு அதிகம் மக்களை இந்த சத்தியத்தின்பால் அழைத்தார்களோ, மக்கள் அந்த அளவு விரோதம் கொண்டார்கள்.

சிலர் இஸ்லாம் தழுவிய இறை விசுவாசிகளைத் துன்புறுத்தினார்கள். அடித்தார்கள், தீயில் படுக்க வைத்தார்கள். கழுத்தில் கயிற்றைப் போட்டு தரையில் இழுத்தார்கள். கல் எறிந்தார்கள். எனினும் தாங்கள் எல்லோருக்கும் அல்லாஹ்விடம் நல்ல பிரார்த்தனை புரிந்தார்கள். யாரிடமும் பழிவாங்கவில்லை.

இரவெல்லாம் தன் எசமானிடம் அவர்களின் நேர்வழிக்காக மனமுருகி அழுது பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்கள். ஒரு தடவை மக்காவாசிகள் பற்றி நம்பிக்கையிழந்து தாயிப் என்ற ஊருக்குச் சென்றார்கள். அங்குள்ளவர்கள் இம்மாமனிதரை அவமதித்தார்கள்.

தங்களின் மீது இளம் வட்ட சேட்டைக்காரர்களைத் தூண்டிவிட்டார்கள். அவர்கள் தங்களைத் திட்டி ஏசினார்கள், கற்கள் எறிந்து விரட்டினார்கள். அதனால் தங்களின் அடிக்கால்களில் இரத்தம் ஓடலாயிற்று. வேதனை தாங்க முடியாமல், தாங்கள் எங்காவது சற்று அமர்ந்துவிட்டால், அந்த இளசுகள் தாங்களை உட்காரவிடாமல் மீண்டும் எழ வைத்து மறுபடியும், கற்களால் அடிப்பார்கள்.

இதே நிலையில் தாங்கள், அவ்வூரிலிருந்து வெளியேறி ஓரிடத்தில் அமர்ந்தார்கள். அவர்கள் மீது தாங்கள் சாபமிடவில்லை. மாறாக தன் எசமானிடம் "என் இரட்சகா ! அவர்கள் ஒன்றும் அறியாதவர்கள். எனவே அவர்களுக்கு விளக்கம் கொடு!" என்று தான் உருக்கமாக பிரார்த்தித்தார்கள். தாங்கள் இந்த பரிசுத்த வேதம் இன்னும் இறைத்தூதை எத்தி வைப்பதற்காக தங்களின் பிரிய ஊர் மக்காவை, பிறந்த மண்ணைக்கூட விடவேண்டிய நிலை ஏற்பட்டது.

பிறகு தாங்கள் மதீனா மாநகர் சென்று விட்டார்கள். அங்கும் மக்கா வாசிகள் படைகளை ஆயத்தம் செய்து கொண்டுபோய் அடிக்கடி தங்களுடன் போரிடலானார்கள்.

## உண்மைக்குக் கிடைத்த வெற்றி

உண்மைக்கு என்றும், எங்கும் வெற்றியுள்ளது. அதன்படி இங்கும் ஏற்பட்டது. 23 ஆண்டு கால கடும் சிரமத்திற்குப்பின் தாங்கள் எல்லா விதத்திலும் வெற்றி பெற்றார்கள். சத்திய வழியின் சார்பாக வழங்கிய தங்களின் மாசு மருவற்ற அழைப்பு, அரபுநாடு முழுவதையும் இஸ்லாமின், இனிய தனலில் கொண்டு வந்து நிறுத்திவிட்டது. முழு உலகினும், ஒரு புரட்சியே ஏற்பட்டது. சிலை வணக்கம் தடைபட்டது. வம்ச ஏற்றத்தாழ்வு இல்லாமல் ஆகிவிட்டது.

எல்லோரும் ஏக அல்லாஹ்வை ஏற்று அவனையே வணங்குபவர்களாகிவிட்டனர்.



## இறுதி அறிவுரை

தங்களின் மரணத்திற்குச் சில மாதங்கள் முன்பு தான், 1¼ லட்சம் முஸ்லிம்களுடன் தாங்கள் ஹஜ்ஜுப் பயணம் மேற்கொண்டார்கள். எல்லோருக்கும் தாங்கள் இறுதி அறிவுரை வழங்கினார்கள். அதில் பின்வரும் விஷயமும் கூறினார்கள் ... மக்களே ! மரணத்திற்குப்பின் செயல்கள் பற்றி உங்களிடம் விசாரணை செய்யப்படும் போது, என்னைப்பற்றியும், நான் அல்லாஹ்வின் மார்க்கத்தை சத்திய தூதை மக்கள் வரை சரியாக எத்தி வைத்து விட்டேனா? என்று விசாரிக்கப்படுமே? உடனே இஸ்லாமியர்கள் அனைவரும் ஒரு குரலாக ... சத்தியமாக நீங்கள் எத்திவைத்து விட்டீர்கள் என்றார்கள்.

உடனே முஹம்மது (ஸல்) அவர்கள் வானத்தை நோக்கி விரல் உயர்த்தி, அல்லாஹ்வே நீயே சாட்சியாக இரு ! என்று கூறிவிட்டு மக்களிடம், "இந்த சத்திய மார்க்கத்தை அடைந்தவர்கள், இதனை அடையாதவர்கள் வரை கொண்டு சேர்க்க வேண்டும்!" என்றார்கள்.

மேலும் நான் இறுதித் தூதராவேன். இனி எனக்குப் பின் வேறு எந்த இறைத்தூதரும் வரமாட்டார். நான் தான் நீங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் அந்த இறுதி நபி "நராஷீனஸ்", கல்கி அவதாரமாவேன். அவரைப் பற்றி நீங்கள் எல்லாம் அறிந்துள்ளீர்கள் என்றார்கள்.

"திருமறையில்" நாம் வேதம் கொடுத்துள்ள அந்த தூதரை முஹம்மது (ஸல்) அவர்களை தாம் பெற்றெடுத்த மக்களை அறிந்திருப்பது போன்று (ஒளிவு மறைவின்றி) நீங்கள் அறிந்துள்ளீர்கள். ஆம்! ஐயமின்றி அவர்களில் ஒரு சாரார் சத்தியத்தை மூடிமறைக்கின்றனர் என்றுள்ளது. (அல்பகரா : 147)

### ஒவ்வொரு மனிதனின் பொறுப்பு

இப்போது மறுமை நாள் வரும் வரையுள்ள மனிதர்கள் ஒவ்வொருவரின் பொறுப்பு, அவனது மத ரீதியான இன்னும் மனிதாபிமான கடமையாதெனில், அவன் அந்த ஏக இறைவனை வணங்க வேண்டும். அவனுடன் வேறு யாரையும் இணை வைக்கக்கூடாது. அவனுடைய இறுதித்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களை உண்மையாளராக நம்பி அவர்கள் கொண்டு வந்த மார்க்கம், வாழ்வியல் வழிமுறைகளைக் கடைபிடித்து நடக்க வேண்டும்.

இஸ்லாமில் இதைத்தான் (ஈமான்) இறைவிசுவாசம் எனப்படுகிறது. அதுவின்றி மரணமடைந்துவிட்டால் நிரந்தரமாக நரகில் எரிய நேரிடும்.

### ஒரு சில கேள்விகள்

இங்கே உங்களின் மனதில் சில கேள்விகள் எழலாம்! மரணத்திற்குப்பின் சுவனம், நரகம் செல்வது கண்ணுக்குத் தெரிவதில்லையே, இதை எப்படி நம்புவது? என்பது கேள்வி ...

இது தொடர்பாக, இவ்வளவு விளங்கிக்கொள்வது பொருத்தமாக இருக்கும். அதாவது, எல்லா முன் வேதநூற்களில் சுவனம், நரகம் பற்றிய விபரங்கள் கூறப்பட்டுள்ளன. இதன்மூலம் சுவனம், நரகம் பற்றிய கண்ணோட்டம் எல்லா மதங்களிலும் ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று எனத் தெரிகிறது. அதை ஓர் உதாரணத்தின் மூலமும் விளங்க முடியும்.

ஒரு சிசு, தாயின் கருவில் இருக்கும் போது அதனிடம் நீ வெளியில் வந்தால் பால் குடிப்பாய்! அழுவாய்! வெளியில் ஏராளமானவற்றைப் பார்ப்பாய்! என்று யாராவது கூறினால் கருவறைக் குழந்தைக்கு அதை நம்ப முடியாது. எனினும் கருவறையிலிருந்து வெளிவந்த உடனேயே இதுவெல்லாம் அதன் முன் காணப்படும்.



இவ்வாறே உலகம் முழுவதும் ஒரு கருவறையின் நிலை போன்றது. மரணத்திற்குப்பின் (இங்கிருந்து) வெளியேறி மனிதன் மறுமையில் கண்திறந்தால் இதெல்லாம் தன் முன் காண்பான்.

அங்குள்ள சுவனம், நரகம் இன்னும் இதர யதார்த்தங்கள் பற்றிய விபரங்களை, பரம எதிரி கூட பொய்யர் என்று கூற முடியாத ஒரு மெய்யர், இறைத்தூதர் நமக்குக் கூறியுள்ளார். மேலும் குர்ஆன் போன்ற இறைவேதமும், அவற்றை நமக்கு அறிவித்துள்ளது. குர்ஆனின் சத்தியத் தன்மையை நமது அந்நியர்கள் கூட மனம் திறந்து ஒப்புக் கொண்டுள்ளனர்.

### இரண்டாம் கேள்வி

உங்களின் மனதில் உறுத்தலை ஏற்படுத்தும் மற்றொரு விஷயம் எல்லா இறைத்தூதர்களும், மதங்களும் இன்னும் மதவேதங்களும் உண்மையாக இருந்தன எனில், பிறகு இஸ்லாமை ஏற்க வேண்டும் என்ற அவசியம் என்ன?

இன்றைய உலகில் இதற்குரிய பதில் முற்றிலும் இலகுவானது. நமது நாட்டிற்கு ஒரு பாராளுமன்றம் உள்ளது. நமக்கென்று ஓர் அரசியல் சாசன சட்டம் உள்ளது. இதுவரை பதவி வகித்த பாரத பிரதமர்கள் அனைவரும் உண்மையில் பிரதமர்களே!

பண்டிட் ஜவஹர்லால் நேரு, சாஸ்திரி ஜீ, இந்திராகாந்தி, சரண்சிங், ராஜீவ்காந்தி, வி.பி.சிங் போன்றவர்கள் நாட்டின் தேவைக்கேற்ப காலத்தின் அவசியத்திற்கேற்ப அவர்கள் தீர்மானித்த சட்டங்களும், திருத்தங்களும் எல்லாம், பாரத நாட்டின் சட்டங்களாக இருந்தன எனினும் தற்போதைய பிரதமர் தனது கேபினேட் இன்னும் அரசு மூலம் கொண்டுவரும் திருத்தங்களின் மூலம் முந்தைய சட்டம் இல்லாமல் ஆகிவிடுகிறது. இந்தியக் குடிமகன் ஒவ்வொருவரின் மீதும் இந்த திருத்தப்பட்ட புதிய சட்டத்தை ஏற்பது அவசியமாகும்.

ஓர் இந்தியக்குடிமகன் – திருமதி இந்திராகாந்தி தான் அசல் பிரதமராக இருந்தார். அவரது சட்டத்தை மட்டுமே நான் ஏற்பேன். இந்த புதிய பிரதமரின் திருத்தப்பட்ட சட்டத்தை நான் ஏற்க மாட்டேன். அதன்மூலம் விதிக்கப்படும் வரியை நான் செலுத்த மாட்டேன் என்று கூறினால் இத்தகைய மனிதனை "தேசவிரோதி" என்று ஒவ்வொருவரும் சொல்வர். அவர் தண்டிக்கப்பட வேண்டியவர் என்பர்.

இவ்வாறே எல்லா மதங்களும், மதவேதங்களும், தம்தமது காலத்தில் வந்தன. எல்லாமே சத்தியத்தின் போதனைகளை வழங்கிக் கொண்டிருந்தன. எனவே இப்போது எல்லா இறைத் தூதர்களையும், மத வேதங்களையும் உண்மையானவை என்று ஏற்றுக்கொள்வதுடன் இறுதி இறைத்தூதர் முஹம்மது (ஸல்) அவர்களை நம்புவதும் அவர்களின் மார்க்க சட்டங்களின்படி செயல்படுவதுமே ஒவ்வொரு மனிதனுக்கும் அவசியம்.

## சத்திய மார்க்கம் ஒன்றே ஒன்று தான்

மதங்கள் எல்லாமே இறைவனின்பால் இட்டுச் செல்கின்றன தான். பாதைகள் தான் வெவ்வேறு. சென்றடையும் இடம் ஒன்றுதான் என்று சொல்வது எவ்விதத்திலும் பொருந்தாது. ஏனெனில் உண்மை ஒன்று தான் இருக்க முடியும். பொய்கள் பல இருக்கலாம். ஒளி ஒன்று தான் இருக்கும், இருள்கள் ஏராளமாக இருக்கலாம்.

சத்தியமார்க்கம் ஒன்றே ஒன்று தான். அது ஆரம்பம் முதலே ஒன்றே ஒன்று தான். எனவே அந்த ஒருவனை மட்டுமே நம்புவது மேலும் அந்த ஒருவனுக்கு மட்டுமே வழிபடுவது தான் இஸ்லாம். அடிப்படை மார்க்கம் எப்போதும் மாறுவதில்லை.

அதன் வழிமுறைகள் மட்டும் காலத்திற்கேற்ப மாறிக்கொண்டிருந்தன. மேலும் அதுவும் கூட அந்த எசமானின் காட்டித்தந்த வழிமுறைப்படிதான். மனித இனம் ஒன்று எனும் போது, அதன் எசமான் இரட்சகன் ஒருவன்தான் எனும் போது, பாதையும் ஒன்றே ஒன்று தான்.



இதைத்தான் திருக்குர்ஆன் அல்லாஹ்வின் மார்க்கம் என்பது இஸ்லாம் மட்டுமே (ஆல இம்ரான் : 19) என்று அழுத்தமாகக் கூறியுள்ளது.

## இன்னொரு கேள்வி ?

முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் சத்தியதூதர். மேலும் அவர்கள் தான் உலகின் இறுதித்தூதர் என்பதற்குரிய ஆதாரம் என்ன? என்று கேள்வியும் மனதை நெருடுவதுண்டு. இதன் தெளிவான பதிலாவது ...

முதலாவதாக. இந்த குர்ஆன் இறைவனின் வேதவசனம். அது தனது சத்தியத் தன்மைப் பற்றி, உலகிற்கு வழங்கிய ஆதாரங்கள் அனைத்தும் ஏற்று அங்கீகரிக்கப்பட்டவை. இன்று வரை அதன் சவாலை முறியடிக்க முடியவில்லை.

இரண்டாவதாக, முஹம்மது (ஸல்) அவர்களது வாழ்வின் ஒவ்வொரு கோணமும், உலகின் முன் தெளிவாக உள்ளது. அவர்களின் முழு வாழ்க்கை வரலாறு திறந்த புத்தகமாக உள்ளது. உலகின் எந்த மனிதரின் வாழ்வும் தங்களின் வாழ்வு போன்று பாதிக்கப்பட்டதாகவும் வெளிச்சமாகவும் இல்லை.

தங்களின் எதிரிகள், இஸ்லாம் விரோத வரலாற்று ஆய்வாளர்கள் கூட, முஹம்மது (ஸல்) அவர்கள் தங்களின் சொந்த வாழ்வில், எப்பவும், யாரைப்பற்றியும் பொய்யுரைத்ததாக ஒரு போதும் சொல்லவில்லை. தங்களின் ஊர்வாசிகள், தங்களின் சத்தியத்தன்மை பற்றி சத்தியமிட்டுச் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

தங்களின் சொந்தவாழ்வில் ஒருபோதும் பொய்யுரைக்காத அந்த சிறந்த மனிதர், மார்க்கத்தின் பெயரால், இறைவனின் பெயரால் பொய்யுரைக்க எப்படி துணிவார்? "நான் இறுதித்தூதராவேன், எனக்குப்பின் இனி எந்த தூதரும் வரமாட்டார். அது பற்றிய எந்த முன்னறிவிப்பும் செய்யப்பட வில்லை" என்று முஹம்மது (ஸல்) அவர்களே கூறியுள்ளார்கள்.

சகல மத வேங்களிலும், கூறப்பட்டுள்ள "**இறுதி ரிஷி**" "**கல்கி அவதாரம்**" பற்றிய முன்னறிவிப்பும், அடையாளங்களும், முஹம்மது (ஸல்) அவர்களுக்கு மட்டுமே முழுமையாகப் பொருந்துகின்றன.

### பண்டிட் வேத பிரகாஷ் அபாதியாயேயின் தீர்ப்பு

பண்டிட் வேதபிரகாஷ் அபாதியாயே எழுதியுள்ளார். இஸ்லாமை ஏற்றுக்கொள்ளாதவன், ஹஜ்ரத் முஹம்மது (ஸல்) அவர்களையும், அவர்களின் மார்க்கத்தையும் ஏற்றுக் கொள்ளாதவன் – இந்துவும் அல்ல. ஏனெனில், இந்துக்களின் மத நூல்களில் "**கல்கி அவதாரம்**" இன்னும் "**நராஷனஸ்**" இந்த பூமியில் அவதரித்தபின் அவர்களையும், அவர்களின் மார்க்கத்தையும் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று சொல்லப்பட்டுள்ளது.

எனவே தனது மதநூல்களின் நம்பிக்கை கொண்டுள்ள எந்த இந்துவும் அவர்களை ஏற்றுக்கொள்ளாவிடில் மரணத்திற்குப் பின்னுள்ள வாழ்வில், நரக நெருப்பும், அங்கு இறைவனின் தரிசனம் கிடைக்காது போவது, இன்னும் அவனது கோபத்திற்குரியவனாக ஆவதும் தான் ஏற்படும்.

### இறை விசுவாசத்தின் அவசியம் !

மரணத்திற்குப்பின் உள்ள வாழ்வு அல்லாமல் இந்த உலகிலும் ஈமான் இறைவிசுவாசம் , இன்னும் இஸ்லாம் நமக்குத் தேவை. மேலும் ஓர் இறைவனை வணங்குவது தான் மனிதனின் கடமை. அவனது சந்நிதானத்தை விட்டு விட்டு, வேறு யாரின் முன் தலைதாழ்த்தித் திரிந்தால், அவன் மிருகங்களை விடவும், கேடு கெட்டவன். நாயும் கூட தன் எசமானின் வாயிலில் காத்துக்கிடக்கிறது.



அவனிடமே எதிர்பார்த்து நம்பியிருக்கிறது. தன் சத்திய எசமானை மறந்துவிட்டு, வாசல் வாசலாக தலை தாழ்த்தி திரியவன் என்ன மனிதன் ? எனினும் இந்த இறை விசுவாசத்தின் அதிகபட்ச தேவை, மரணத்திற்க்குப்பின் உள்ள வாழ்வில் தான். அங்கிருந்து மனிதன் திரும்பி வர முடியாது. அங்கு மரணத்தை அழைத்தாலும், அவனை மரணம் தழுவாது. அந்நேரம் கை சேதமும் எந்த பலனையும் தராது. மனிதன் இங்கிருந்து இந்த ஈமான், இறைநம்பிக்கையின்றி சென்று விட்டால், நிரந்தரமாக நரகில் எரிய நேரிடும்.

இந்த உலக நெருப்பின் ஒரு சிறு கனலும் கூட உடலில் பட்டு விட்டால், நாம் எப்படி துடித்துப்போகிறோம் என்றால் நரக நெருப்பை எப்படி தாங்க முடியும் ? அது இந்த நெருப்பை விட எழுபது மடங்கு கடும் உஷ்ணமானது. அதில் நிரந்தரமாக எரிந்து கொண்டிருக்க நேரிடும். ஒரு தோல் எரிந்து கரிந்து விட்டால் வேறு ஒரு தோல் மாற்றப்படும் இப்படி தொடர்ச்சியாக இந்த தண்டனையை அனுபவித்துக் கொண்டே இருக்க நேரிடும்.

### அன்பிற்கினிய வாசக நேயர்களே !

எனது அன்பிற்கினிய வாசக நேயர்களே! மரணம் எப்போது வரும் என்று தெரியாது. உள்ளிழுத்த சுவாசம் வெளிவருவது பற்றியும் நிச்சயமில்லை. வெளியில் விட்ட மூச்சு உள்ளே செல்லும் நம்பிக்கையும் இல்லை. மரணத்திற்கு முன் அவகாசமுண்டு. தமது மிகப்பெரிய, இன்னும் மிக முதன்மையான பொறுப்பை, கடமையை உணர்ந்து கொள்ளுங்கள்! ஈமான் இன்றி இந்த வாழ்வும்... வாழ்வு அல்ல. மேலும் மரணித்த பின் வரும் வாழ்வும் வாழ்வாகாது.

நாளை எல்லோரும் நமது எசமானிடம் செல்ல வேண்டியுள்ளது. அங்கு முதன்மையாக "ஈமானைப் பற்றித்தான் விசாரணை செய்யப்படும்." இதில் எனது சுயநலமும் உண்டு...

எங்களுக்கு இந்த உண்மை எத்திவைக்கப்படவே இல்லை என்று, நாளை விசாரணை நாளன்று நீங்கள் சொல்லிவிடக் கூடாதல்லவா?

இந்த சில சத்திய வரிகள் உங்கள் மனதில் இடம் பிடித்திருக்கும் என்று நம்புகிறேன். அப்படியானால் வாருங்கள் கண்ணியவான்களே ! சத்திய இதயமும், ஆத்மாவும் படைத்த என் பிரிய நண்பர்களே ! அந்த உண்மை எசமானை சாட்சியாக்கி, இதயங்களின் நிலையை அறிபவனாகிய அந்த அல்லாஹ் ஏற்றுக்கொள்ளும் விதமாக உண்மை உள்ளத்துடன் முன்மொழியுங்கள் ! வாக்களியுங்கள்!

"அஷ்ஹது அன்லாயிலாஹ இல்லல்லாஹு வ
அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு
வ ரஸூலுஹு"

பொருள் :

அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவன் தனித்தவன். அவனுக்கு இணை, துணை யாருமில்லை என்றும், முஹம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் உண்மை அடியாரும் இறைத்தூதருமாக இருக்கிறார்கள் என்றும் சாட்சி கூறுகிறேன். மேலும் நான் இறை நிராகரிப்பிலிருந்து, யாரையும் அல்லாஹ்வுடன் இணை வைப்பதிலிருந்து, இன்னும் சகல பாவங்களிலிருந்து (தவ்பா) பாவ மீட்சி பெறுகின்றேன்.

மேலும் என்னைப் படைத்த சத்திய எசமானின் அனைத்து சட்டங்களையும் ஏற்கிறேன். மேலும் அவனது சத்திய தூதர் முஹம்மது (ஸல்) அவர்களுக்கு உண்மையாகக் கட்டுப்படுகிறேன் ! என்று உறுதிபட கூறுங்கள். அன்பாளன், கருணையாளனாகிய எசமான், என்னையும், உங்களையும் இறுதி மூச்சு வரை இந்த பாதையில் நிலைத்திருக்கச் செய்வானாக !



என் அன்பு நண்பர்களே ! நீங்கள் உங்கள் மரணம் வரை இந்த ஈமான் இறை நம்பிக்கையுடன் உங்கள் வாழ்வைக் கழித்து வந்தீர்களானால், உங்களின் இந்த சகோதரன் எப்படிப்பட்ட அன்பின், கடமையாற்றினான் என்பது பிறகு தான் தெரியும்.

## இறை நம்பிக்கைக்கு வரும் சோதனை !

இந்த இஸ்லாம் ஈமான் காரணமாக உங்களுக்கு சோதனைகளும் ஏற்படலாம். எனினும் வெற்றி எப்போதும் சத்தியத்திற்கே ! இங்கும் சத்தியத்திற்கு வெற்றி கிடைக்கும். மேலும் வாழ்நாள் எல்லாம் சோதனையில் கழிந்தாலும் கூட, இந்த உலக வாழ்வு சில நாட்கள் வரை தான். மரணத்திற்குப்பின் உள்ள வாழ்க்கை முழுதும், அங்கு சுவனம், அதன் சுகங்களை அடைவதற்காக, என் எசமானை திருப்திபடுத்துவதற்காக, அவனை நேருக்குநேர் தரிசிப்பதற்காக, இந்த சோதனைகள் ஒன்றுமில்லை என்று நினைத்து சகித்துக்கொள்ள வேண்டும்.

## இனி உங்களின் கடமை :

இன்னொரு விஷயத்தையும், உங்கள் கவனத்திற்கு முன்வைக்கிறேன். ஈமான் இன்னும் இஸ்லாம் என்ற இந்த சத்தியம், இதுவரை யாருக்கெல்லாம் கிடைக்கவில்லையோ, அந்த சகோதரர்களின் உரிமையும், உடமையாகவும் இருக்கிறது.

எனவே, எந்த ஆதாய நோக்கின்றி, தூய்மையுடன் தம் சகோதரர்களின் மீதுள்ள அக்கறையில், அவர்களை எசமானின் கோபம், நரக நெருப்பு, இன்னும் தண்டனையிலிருந்து காப்பாற்ற வேண்டும் என்று வேதனை உணர்வுடன் பிரிய இறைத்தூதர் இந்த சத்தியத்தை எத்திவைத்தது போன்று, நீங்களும் எத்திவைப்பது உங்கள் கடமையாகும்.

அவர்களுக்கு சத்திய பாதை சரியாக விளங்குவதற்கு உங்களின் எசமானிடம் பிரார்த்தனையும் புரிய வேண்டும்.

ஒருவரின் முன் ஒரு குருடன் பார்க்க முடியாத காரணத்தால் நெருப்புக்குண்டத்தில் விழவிருக்கிறான் எனில் ஒரு தடவையேனும், உமது இந்த பாதை நெருப்புக்குண்டம் நோக்கிச் செல்கிறது என்று வாய் திறந்து சொல்லாதவனும், மனிதன் என்று சொல்லப்படுவதற்கு அருகதையானவன் தானா? அவனைத் தடுப்பதும், பிடித்துக்காப்பாற்றுவதும், "**எனக்கு சக்தி இருக்கும் வரை உன்னை நெருப்பில் விழ விடமாட்டேன்**" என்று உறுதி கூறுவதுமல்லவா மனிதப் பண்பு ...!

ஈமான் கொண்ட பின் ஒவ்வொரு முஸ்லிமின் கடமை யாதெனில், யாருக்கு மார்க்கம், இறைத்தூதர், இறை வேதம் குர்ஆனின் நேர்வழி கிடைத்து விட்டதோ, அவர் இணை வைத்தல், இறை நிராகரிப்பின் நெருப்பில் சிக்கியுள்ளவர்களைக் காப்பாற்றும் சிந்தையில் மூழ்கி விடவேண்டும். அவர்களின் முகவாயில் கை வைத்து, அவர்களின் கால்களைப் பிடித்துக்கொண்டு, "ஈமானை விட்டும் விலகி தவறான வழியில் சென்று விட வேண்டாம் !" என்று கெஞ்சிக் கேட்க வேண்டும்.

ஆதாய நோக்கின்றி, உண்மையான அக்கறையுடன் சொல்லப்படும் பேச்சு, மனதில் தாக்கத்தை ஏற்படுத்துகிறது. உங்கள் மூலமாக ஒருவருக்கேனும் நேர்வழி கிடைத்து விட்டால், ஒருவரேனும் எசமானின் சத்திய வாசலில் வந்து சேர்ந்து விட்டால் நாம் கரை சேர்ந்து விட்டோம், நமது காரியம் கைகூடி விட்டது எனலாம்.

ஒருவரை இறை நிராகரிப்பு இணை வைப்பிலிருந்து வெளியேற்றி, சத்தியப்பாதையில் ஈடுபடுத்தியவரின் மீது அல்லாஹ் மிக மகிழ்வுறுகிறான்.



உங்களின் அன்பு மைந்தன் உங்களின் துரோகியாகி, உங்களின் எதிரியுடன் சேர்ந்து கொண்டு அவன் சொல்வதைக் கேட்டு நடந்து கொண்டிருக்கிறான் எனில், ஒரு நல்லவர் அவனுக்குச் சொல்லிப் புரிய வைத்து உங்களுக்கு கட்டுப்படச் செய்து விட்டால், அந்த நல்லவரின் மீது உங்களுக்கு எவ்வளவு மகிழ்ச்சி ஏற்படும் ! அந்த நல்லவரின் மீது ஏற்படும் மகிழ்ச்சியை விட அடுத்தவருக்கு ஈமானை எத்திவைக்கக் காரணமாகும் அடியாரின் மீது அல்லாஹ் அளவு கடந்த மகிழ்வு கொள்கிறான்.

## ஈமான் – இறை விசுவாசம் மேற்கொண்டபின் !

- ❖ இஸ்லாம் தழுவியபின், நீங்கள் இறைவனின் உண்மை அடியாராக ஆகிவிட்டதும், இனி உங்கள் மீது தினமும் ஐவேளை தொழுவது கடமை. எனவே அதை நீங்கள் கற்றுப்பயின்று, விடாமல் தொழுதுவர வேண்டும். அதனால் உங்கள் ஆன்மா சாந்தியடைவதுடன் அல்லாஹ்வின் அன்பும் வளரும்.
- ❖ ரமளான் மாதம் வந்துவிட்டால், அந்த மாதம் முழுவதும் நோன்பு பிடிக்க வேண்டும்.
- ❖ நீங்கள் பொருளாதார வசதி படைத்தவராயின் உங்களின் பொருளாதார நிலைக்கேற்ப மார்க்கம் நிர்ணயித்துள்ளபடி உங்கள் வருமானத்தின் $2^1/_2$ % ஒதுக்கி உரியவர்களுக்கு தானமளிக்க வேண்டும்.
- ❖ வசதியிருப்பின் ஆயுளில் ஒரு தடவை ஹஜ்ஜுக் கடமையாற்ற வேண்டும்.
- ❖ ஜாக்கிரதை ! இனி உங்களின் சிரசு அல்லாஹ்வைத் தவிர வேறு யாரின் முன்பும் பணியக்கூடாது.
- ❖ மது அருந்துதல், சூதாடுதல், வட்டி வாங்குதல், பன்றி இறைச்சி புசித்தல், லஞ்சம் வாங்குதல் கூடாது.

- இன்னும் மார்க்கத்தில் தடை செய்யப்பட்ட அத்துனை செயல்களை விட்டும், தவிர்த்திருக்க வேண்டும். மேலும் அல்லாஹ்வால், ஹலால் தூயது என்று அறிவிக்கப் பட்டவற்றை தாராளமாக உண்ணலாம்... பருகலாம்...
- உங்களின் எசமானின் புறத்திலிருந்து வழங்கப்பட்ட பரிசுத்த வேதத்தை குர்ஆனை தினமும் ஓதி வரவேண்டும். மேலும் சுத்தம், தூய்மையின் வழி வகைகளை நன்கு அறிந்து தெளிவு பெற்றுக் கொள்ள வேண்டும்.
- உண்மை மனதுடன் எங்கள் இரட்சகா எங்களையும், எங்கள் நண்பர்களையும், குடும்பத்தார், உற்றார், உறவினர்களையும், இப்பூமியில் வாழும் முழுமனித குலத்தையும், ஈமான் இறை விசுவாசத்துடன் உயிர் வாழவை. ஈமான் இறை விசுவாசத்துடன் மரணிக்கச் செய் என்று உருக்கமாக பிரார்த்தித்து வர வேண்டும்.
- ஏனெனில் இறைவிசுவாசம் தான் மனித குலத்தின் முதன்மையும், இறுதியுமான நம்பிக்கை. இறைத்தூதர் இப்ராஹீம் (அலை) அவர்கள் கொழுந்துவிட்டு எரிந்து கொண்டிருந்த குண்டத்தில் வீசியெறியப்பட்ட போது, தங்களின் இறை நம்பிக்கையின் ஒளியை வீசச் செய்தார்கள். அதனால் அவர்களின் ஒரு முடி கூட கருகவில்லை.
- இன்றும் கூட அந்த ஈமானிய சக்தி நம்மிடமிருந்தால் நெருப்புக்குண்டம் நமக்கும் பூஞ்சோலையாகும். சத்தியப் பாதைக்கு எதிராக உள்ள தடைகள் எல்லாம் தவிடு பொடியாகிவிடும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

**" இன்றும் கூட நபி இப்ராஹீமின்<br>ஈமான் இருந்தால் நெருப்புக் குண்டம்<br>பூஞ்சோலையாக மாறிவிடுமே "**



தொடர்புக்கு ...

**மனித நல பாதுகாப்பு மையம்**

ஜாமிஆ நகர்,

பள்ளபட்டி - 639 207, கரூர் மாவட்டம்.

தொலைபேசி : 04320-240033, 94860 58551.

anbu